உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

இரண்டாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

20—12—'56



தருமபுர ஆதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்,

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண். 379.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# சம்பிரதாய தீபம்

திருக்கயிலாய பரம்பரை ஸ்ரீ கண்ட சந்தான சம்பிரதாய அவிச்சின்ன ஞானபீடமாகிய தருமபுர ஆதீனத்து

ஸ்ரீமத் சிவாநந்த முனிவர்

அருளியது.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்
திருவுளப்பாங்கின்வண்ணம்
வெளியிடப்பெற்றது.



உரிமைப் பதிவு] 1956 [தருமபுர ஆதீனம்

உ

குருபாதம்

# சம்பிரதாய தீப வெண்பா

## பொருளடக்கம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துப் பத்தாவது குருமூர்த்தியாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் காலத்துக் (கி. பி. 1740) காசியம்பதி முத்திமண்டபத்தே அவர்கள் திருமுன்னர், சிவாநந்த முனிவர் என்பார் புறச்சமயத்தார் சைவசமயப் போருட்குக் கூறுந் தடைகளை மறுத்துத் தமது பீடாதிபர் பரம்பரையில் வழங்கிவந்த சம்பிரதாயக் கோள்கைகளை இந் நூலின்கண் தெளிவாக வரைகின்றார்.

## குருபூஜைத் திருநாள்

| எண் | சந்தானகுரவர் பரம்பரைத் திருநாமம் | பரிபூரண ஸ்தலம் | மாதம் | பக்ஷம் | திதி |
|---|---|---|---|---|---|
| 1 | ஸ்ரீதக்ஷிணாமூர்த்திதேவர் | இவர்கள் கைலாய வாசிகள் | | | |
| 2 | திருநந்திதேவர் | | | | |
| 3 | சனற்குமாரமுனிவர் | ,, | | | |
| 4 | சத்தியஞானதரிசனிகள் | ,, | | | |
| 5 | பரஞ்சோதிமாமுனிகள் | ,, | | | |
| 6 | மெய்கண்டதேவர் | திருவேண்ணெய் | ஐப்பசி | சுக்கில | ப்ரதமை |
| 7 | அருணந்திசிவாசாரியார் | துறையூர் [நல்லூர் | புரட்டாசி | கிருஷ்ண | த்ரயோதசி |
| 8 | மறைஞானசம்பந்தர் | திருக்களாஞ்சேரி | ஆவணி | சுக்கில | த்விதியை |
| 9 | உமாபதிசிவாசாரியார் | கோற்றவன்குடி | சித்திரை | ஷை | த்வாதசி |
| 10 | அருணமச்சிவாயர் | ஷை | மார்கழி | ஷை | பௌர்ணமி |
| 11 | கங்கைமெய்கண்டார் | சீகாழி | கார்த்திகை | கிருஷ்ண | பஞ்சமி |
| 12 | பழுதைகட்டிச்சிற்றம்பலவர் | மதுரை | பங்குனி | கிருஷ்ண | நவமி |
| 13 | பழுதைகட்டிஞானப்ரகாசர் | காளத்தி | ஐப்பசி | கிருஷ்ண | சதுர்த்தி |
| 14 | ஞானப்ரகாசர் | திருவாரூர் | ஷை | கிருஷ்ண | ஷஷ்டி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 15 | குருஞானசம்பந்த தேசிகர் | தருமை | வைகாசி | கிருஷ்ண | ஷஷ்டி |
| 16 | ஆனந்தபரவச தேசிகர் | ஷ | மார்கழி | கிருஷ்ண | திருதியை |
| 17 | சச்சிதானந்த தேசிகர் | ஷ | ஆனி | சுக்கில | ஸப்தமி |
| 18 | மாசிலாமணி தேசிகர் | ஷ | புரட்டாசி | சுக்கில | ஏகாதசி |
| 19 | ஞானசம்பந்த தேசிகர் | ஷ | ஆவணி | சுக்கில | த்விதியை |
| 20 | திருஞானசம்பந்த தேசிகர் | சிந்துபூந்துறை | சித்திரை | கிருஷ்ண | ப்ரதமை |
| 21 | திருவம்பல தேசிகர் | தருமை | ஐப்பசி | சுக்கில | பௌர்ணமி |
| 22 | அழகியதிருச்சிற்றம்பல தேசிகர் | கோட்டூர் | கார்த்திகை | சுக்கில | ஏகாதசி |
| 23 | திருநாவுக்கரசு தேசிகர் | தருமை | ஐப்பசி | சுக்கில | பௌர்ணமி |
| 24 | சிவஞான தேசிகர் | ஷ | ஷ | கிருஷ்ண | தசமி |
| 25 | சச்சிதானந்த தேசிகர் | ஷ | மார்கழி | சுக்கில | தசமி |
| 26 | முத்துக்குமார தேசிகர் | ஷ | சித்திரை | கிருஷ்ண | அஷ்டமி |
| 27 | ஞானசம்பந்த தேசிகர் | ஷ | ஆவணி | கிருஷ்ண | ஏகாதசி |
| 28 | கந்தப்ப தேசிகர் | ஷ | ஷ | கிருஷ்ண | நவமி |
| 29 | மாசிலாமணி தேசிகர் | ஷ | தை | கிருஷ்ண | ஷஷ்டி |
| 30 | சச்சிதானந்த தேசிகர் | சிவசைலம் | கார்த்திகை | சுக்கில | த்வாதசி |
| 31 | மாணிக்கவாசக தேசிகர் | திருபுவனம் | மாசி | கிருஷ்ண | சதுர்த்தி |
| 32 | சிவஞான தேசிகர் | திருப்பனந்தாள் | கார்த்திகை | சுக்கில | பௌர்ணமி |
| 33 | மாணிக்கவாசக தேசிகர் | தருமை | ஆனி | சுக்கில | சதுர்த்தி |
| 34 | சிவஞான தேசிகர் | ஷ | ஆடி | கிருஷ்ண | ஸப்தமி |
| 35 | சச்சிதானந்த தேசிகர் | ஷ | பங்குனி | கிருஷ்ண | பஞ்சமி |
| 36 | மாணிக்கவாசக தேசிகர் | ஷ | ஐப்பசி | கிருஷ்ண | சதுர்த்தி |
| 37 | சுப்பிரமணிய தேசிகர் | ஷ | ஆனி | சுக்கில | சதுர்த்தி |
| 38 | சண்முக தேசிகர் | ஷ | வைகாசி | சுக்கில | நவமி |

உ

சிவமயம்

# சம்பிரதாய தீபம்

## முதற்பதிப்பின்

## முகவுரை

சைவ சமய மெய்ச்சம யந்தனி
லுய்வகைச் சமய வுயர்நிலைத் தவரையு
மெய்ப்பில்சந் தானத் துய்ப்பவர் தமையு
மவர்வழிக் குழீஇய தவர்தமை யுஞ்சால்
பரம்பரை யவரையுஞ் சிவனெனப் பேணி
யாங்கவர் வழங்கிய பாங்கமை வழக்கம்
வழிவழி சிறப்பப் பழியிலா மரபி
னிலையிற் பிரியாக் கலையோடு சிவணி
நன்மைகைப் பிடித்து ஞான நெறியின்
றன்மை மாந்துதல் சான்றோர் கடனே,

ஆதலின், ஈண்டு

நற்பொருளாம் பரம்பாலி னந்தியரு ணூலும்
நல்வழியாம் மெய்கண்டான் சண்பையர்தம் நாதன்
அற்புதமா முமாபதிதா மிவருரைத்த நூலும்
ஆகமத்தி னுட்பொருளு மளவில்பர சமயப்
புற்புதமாம் நிலையில்பொரு ளனைத்தினையும் பார்த்துப்
பொருண்மைப்பா லறியாத மருண்மைப்பா லுடையேன்

ஸ்ரீகண்ட சந்தான சம்பிரதாய அவிச்சின்ன பரம்பரையின்படி உண்மை நெறியை யறிதல்வேண்டுமென்னும்

ஆதரவுடன் சுவடிகளைக் கருத்தூன்றிப் பார்த்தவளவில், பல அரிய நூல்களிடையே சம்பிரதாய தீபமென்னும் இச்சீரிய நூல் கிடைக்கப்பெற்று, அதனைப் பிரதிசெய்து படனஞ்செய்து வருகையில், எனது நண்பர் பலர் விருப் பத்திற் கிணங்கிப் பிரசுரிக்கலாயினேன். என்மாட்டு யாதேனுந் தவறுளதேற் பெரியார் பொறுப்பது கடனே.

இந்நூல், வைதிக சைவ சுத்தாத்துவித சித்தாந்தத்தை எளிதின் விளக்குதலின், யாவர்க்கும் பயன்படத்தக்கது. இதற்கு உரையொன்று எழுதக் கருதினே னாயினும், விரி வஞ்சிஅதனை விடுத்து, என் ஆற்றலுக்கு இயன்றவரை யதிகாரவடைவும் செய்யுளியைபும் மாத்திரம் காட்டி யுள்ளேன். விரிந்த அறிவுடையார்க்கு நூற்பொருள் விரிந்து தோன்றும்.

தாரணியிற் செல்வருஞ் சான்றோருந் தந்தம் நிலைமை யிற் றளராது நின்று, உண்மை ஞானத்தை உள்ளவாறு உணர்ந்துய்தற் பொருட்டு, உயரிய சம்பிரதாய நூல்களைக் கற்றல் உத்தமவியல்பாதலின், அன்னாரது பயன் கருதி, இச் சித்தாந்த நூலை வெளியிடும் பணியில் என்னை நியமித் தருளிய தருமபுர ஆதீனத்து 23 ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகளுக்கும், நடுவூருள் வேதிகைசுற்றுக்கோட்புக்க பழம் பொருந்திய தேமாவன்ன தங்கள் திருமாளிகைப் புத்தகநிலையத்தில் இந்நூலுட்பெரும் பகுதியை யான் பிரதிசெய்துகொள்ள அநுமதி தந்த ஸ்ரீகாழி ஸ்ரீமான் ச. சதாசிவ முதலியார் அவர்களுக்கும் என் வந்தனம் கூறுகின்றேன். தொண்டை மண்டலத்துத் தூயோர் ஆகிய இவ்விருவரும் இங்ஙனம் அருளுடையர் ஆவர்.

சிறந்த நுகர்ந்தோழுகுஞ் சேல்வ முடையார்
அறஞ்சேய் தருளுடைய ராதல்—பிறங்கல்
அமையோடு வேய்கலாம் வேற்ப அதுவே
சுமையோடு மேல்வைப்பா மாறு. —பழமோழி 215

'உலகு யிர்க்கேல்லாம் பசுபதி யோருமுத லாயி, னலகில் சீருடையவன்மோழி மறையேனி லதன்க, ணிலக றம்பல வற்றினும்'' இதற்கிணேயிலதேல், இவ் வுயரிய சம்பிரதாயத்தின்கட் சிவபேருமான் எம்மை நடத்தித் தமது இன்னருளேப் பாலிப்பாராக. யாவர்க்கும் சிவம் உண்டாகுக. வேதநேறி தழைத்தோங்க, மிகு சைவத் துறை விளங்க, பூதபரம்பரை போலிக.

தோற்ற முடையார் சிவமுறுவர் மேய்ஞ்ஞானத்
தேற்ற முடையா ரிவர்.

ஸ்ரீகாழி,
பிரபவஹு
கார்த்திகைமீ
12உ

ப. அ. முத்துத்தாண்டவராயன்

சிவமயம்

‘சம்பிரதாய தீபம்’ ஆவது ‘மரபு விளக்கம்’. மரபு பல. இவ்வருள் நூலிலே குருமரபும், சாத்திரமரபும், குருபீட மரபும் விளக்கப்பெற்றுள்ளன.

இது வேண்பாவாலானது. இதனை அருளியவர் தருமை யாதீனத்துப் பத்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களிடத்தில் அருளுபதேசம் பெற்று விளங்கிய ஸ்ரீமத் சிவாநந்த முனிவர்.

ஆசிரியர், சைவ சித்தாந்த சாத்திரப் பயிற்சியில் மிகத் தேர்ந்தவராயிருப்பது வியப்பன்று. அது தருமை யாதீனத்தின் சிறப்பாகும். அளவை நூற்போருளின் தேர்ச்சியும் அதனைச் சைவ சித்தாந்த நுண்போருளோடு போருத்திச், சிறந்த உவமைகளைக் காட்டித் தேளியச் செய்யும் பேருமையும் அவரது ஒப்புயர்வற்ற ஆற்றலை உணர்த்தும்.

இந்நூலின் அருமை பேருமைகளை மிக விரித்து எழுத விருப்பம் இருந்தும், திருவருள் துணை நிற்கவில்லை. ஒரு முறை இத் திருவேண்பாக்களைக் கற்றுணர்ந்தவரும் ஆசிரியரது பாவன்மையையும், நாவன்மையையும், அருட்டிறத்தையும், சிவஞான சாத்திராநுபவத்தையும் தேளிய உணர்வர்.

ஞாஞவரண விளக்கத்தின் அளவையை உணரின், அவ்வாற்றல் இவ்வாதீனத்து முனிவராகிய வேள்ளியம்பல வர்ணருடையது என்பது சாலப் போருந்தும். அருஞ்

சொற்பொருளும் பாட்டகராதியும் இப் பதிப்பில் புதியன வாகும்.

இந்நூலை இரண்டாவது பதிப்பாக வெளியிடப் பணித் தருளிய, 25-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிர மணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவடிகளை முப்பொறித் தூய்மையுடன் போற்றி வணங்கும் பெருவகையுடையேன். அவர்கட்குச் சைவ வுலகம் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையது.

தருமையாதீனம்,
20—12—56.

அடியன்,
முத்து. சு. மாணிக்கவாசகன்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# சம்பிரதாய தீபம்

காப்பு

ஓங்குமா னந்தவனத் தோரோளியா மெய்யானைக்
காங்கே திருவிளையாட் டைந்தொழில்க—ளோங்கார
நாத முழக்குயிர்ப்பு ஞானதி மும்மதமேன்
போதங் கவளப் போசிப்பு. 1

விசுவேசராதியர் வணக்கம்

விசுவபதி சத்தியுமை மெய்க்கங்கை மைந்த
ரசபையிடத் தோங்காரத் தானை—நிசமுருக
னெண்ணி லடியா ரிவர்வடிவ மெல்லாமேன்
கண்ணிரண்டாய்க் காணுது காண். 2

நடராசர் துதி

அரவாகு மாயைபிடித் தார்த்தவினை சுட்டே
விரவுமலங் தாழ மிதித்துத்—திரோதான
மோதியுயி ரைத்தூக்கி முத்திரையான் முத்திதரு
நாதனு னந்தநட னம். 3

# (அ) குருமரபு சம்பிரதாயம்

## 1. குரு வணக்கம்

கல்லா னிழல்வாழ் கயிலாய நாதபதி
சல்லாப நந்தி சனற்குமர—னல்லார்கள்
சேர்சத்ய ஞான தேரிசி புரஞ்சோதி
பேர்வெண்ணெ மெய்கண்டான் பின். 4

துறையூ ரருணந்தி தூய கடந்தை
மறைஞான சம்பந்த மைந்த—னிறைபுலியூர்க்
கோற்றங் குடிவாழுங் கோமா னுமாபதிபின்
பெற்றமச்சுச் சேட்டியார் பின். 5

கழுமலத்தில் வந்தருள்சேர் கங்கைமேய் கண்டான்
பழுதைகட்டிச் சிற்றம் பலவன்—பழுதைகட்டி
ஞானப்ர காசன்ரு ணற்கமலை மாநகர்வாழ்
ஞானப்ர காசனரு ளுடு. 6

ஞானசம் பந்தனு னந்த பரவசன்பின்
ருனவனு கின்றசச்சி தானந்த—னூனமற்
ரோர்மாசி லாமணிபின் ஞோர்ஞான சம்பந்தன்
சார்திரு ஞானசம்பந் தன். 7

எங்குஞ் சிவமா யிலகுதிரு வம்பலவன்
றங்கு மழகியசிற் றம்பலவன்— கங்குல்
பகலற்ற காட்சி பதிப்போன் தருமை
யகல்கிலா நாவுக் கரசு. 8

என்னுங் குரவ ரிடைவிடா தேயருள்சேய்
மன்னுசித் தாந்த வழக்கருளி—யேன்னையாள்
சீரார் சிவஞான தேசிகசம் பந்தன்தாள்
ஆர்வமுடன் வைப்பே னகத்து. 9

## 2. நூற் சிறப்பு

சம்பு சிவஞான சாத்திரபா ரம்பரையிற்
சம்பிரதா யங்களோன்றுந் தப்பாமற்—சம்பந்தன்
சோன்னபோரு ளாதலினல் தோண்டரறி யிந்நூற்பேர்
பன்னுசம்ப்ர தாயதீ பம். 10

## 3. அவையடக்கம்

ஆதார சத்திமுத லண்டமாங் தங்கோடி
நாதவரை யாதனமு நன்மூலஞ்—சோதிசிவ
மேன்றுநின்ற மேய்யடியா ரேண்ணிலிங்க மூர்த்திகளுக்
கின்றேனுள மேதிருக்கோ யில். 11

புன்மை†மிகை யானலும் போல்லாதேன் ஞர்நல்லார்
நன்மை†மிகை யானலு ஞானமிலார்—வன்மை
யினுற்சோல்வ தேத மியல்பாத லாலே
எனுற்றிருத்தக் கூடுமோ வின்று. 12

அடியேன்புன் சோல்லா மழுக்குத் துணியின்
முடியு முடியாத மூன்று—நேடிய
போருளைக்கைக் கோள்வார் போதிந்ததுதீ தேன்று
ரோருமணிகைக் கோள்வா ருவந்து. 13

† 'வேகு' எனலும் பாடம்.

அன்ப ரிருணீங்கி யானந்த மெய்யருந்தத்
தேன்சம் பிரதாய தீபத்தை—யன்பாய்த்
தவாநந்தர் போற்றச்செய் தான்றருமைக் காசிச்
சிவாநந்த ஞுந்தே சிகன். 14

## குரு மரபு விளக்கம் இத்துணையும்

முதல் நூறு செய்யுளும் பத்துச் சம்பிரதாயங்கள் குரு மரபைப் பற்றியவை. 101-186 வரை 86 சம்பிரதாயங்கள் சாத்திரத்தையும் குரு பீடத்தையும் பற்றியவை. ஆகச் சம்பிரதாயம் 96.

## 4. ஞானசம்பந்த விபவம்

இது ஞானப்பிரகாசருக்கும் ஞானசம்பந்தருக்கும் உள்ள அந்தரங்க உரிமையை முற்பட்டோர்மேலேற்றிக் கூறுகின் றமையின் விபவமாயிற்று. இவ்விபவத்தை ஞானசம்பந்த சுவாமிகள் இந்நூலாசிரியர்க்கு இச்சமயத்துச் சிவபோக சாரத்தின் அதிகாரமாகவே உண்ணின்றுணர்த்தினர் என்ப தோர் கோள்கையுளது.

அருவு முருவு மருவுருவு மல்லா
வோருவ னுயிர்க்குயிரா யோங்கித்—திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
அமலபதந் தந்தெனையாண் டான். (சிவபோகசாரம் 2)

ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
யாரறிவார் நற்றவங்க ளன்பனைத்தும்—பாரேவர்க்குங்
கர்த்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசனெனும்
அத்தனென்போல் வந்திலனு ஞல். (சிவ 3)

அரியயற்கு முன்ரு ளடிமுடியுங் காணுப்
பேரியவனே வந்து பிறந்து—துரியம்
பேருக்குகின்ருன் ஞானப் பிரகாச ஞகி
இருக்கின்ரு ஞருரி லின்று. (சிவ 4)

கண்டேனிப் பாசங் கழிந்தே னமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனேப் பொழிகமலேச் சேங்கமலப் போற்பாத
ஞானப்ர காசனேயே நான். (சிவ 5)

உள்ளிருந்தே யேன்று முணர்த்துகினுங் கண்டிலரேன்
றுள்ளும் புறம்புமா வோமேன்று—மேள்ள
நரருருவா யாரூரில் வந்தான் நமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன். (சிவ 6)

இருளுதயம் நீக்கு மிரவியைப்போ லேன்னு
ளருளுதயம் நன்ரு யருளி—மருளுதயம்
மாற்றியவ ஞரூரன் மாமறையு மாகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். (சிவ 7)

ஒழியாத பேரின்பத் துள்ளா யுலகில்
விழியா திருந்து விடவே—யழியாத
பூரண சேங்கமலப் போற்பாதா தேன்கமலே
யாரண நாயேற் கருள். (சிவ 8)

தேடுந் திரவியமுஞ் சிற்றறிவும் பற்றுதலுங்
கூடும்போய் யேன்றருளிற் கூட்டிஞன்—நாடரிய
ஞானப்ர காசனுயர் நற்கமலே மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். (சிவ 9)

காயங் கரணமுதல் நான்கினுக்குங் காரணந்தா
ஞயவிருள் மாயை யதுவேன்ருற்—றூயபோருட்
போதனே சேங்கமலப் போற்பாத னேயேனீ
யேதேன்று சோல்லா யினி. (சிவ 25)

சேங்கமலப் போற்பாதன் சீர்பாத வல்லபங்க
ணங்கமலே வாழ்கிளியே நாடிக்கேள்—சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதிற் றத்துவத்தைக் காட்டியருட்
டத்துவத்தைக் காட்டியது தான். (சிவ 28)

தேசு சேறிகமலேச் சேங்கமலப் போற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன்—பாசவினே
வாட்டினுன் மீட்டும்நான் வாரா வகையருளேக்
காட்டினுன் கூட்டினுன் காண். (சிவ 29)

அகத்தை யிழந்தருளா யவ்விடத்தே தோன்றுஞ்
சுகத்தி லழுந்திவிடச் சோன்ஞன்—மகத்தான
சிற்பரஞ ரூர்தனில்வாழ் சேங்கமலப் போற்பாத
தற்பரஞா னப்பிரகா சன். (சிவ 32)

ஈச னடியி லிருக்கையிலே யேங்கேங்கும்
மீசனடி தேடி யிளேத்தேனே—பேசரிய
போற்பதத்தன் சேங்கமலப் போற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான். (சிவ 48)

நற்பதஞ்சே ராரூரின் ஞானப்ர காசனேந்தை
தற்பரனேர் ஞானவாள் தந்தானே—சோற்பனத்துங்
காரார் மறலியயன் கண்ணனுக்கு மஞ்சேனே
ஆராலு மேன்னசேய்ய லாம். (சிவ 49)

வேறும்பாழிற் பேரின்ப வேட்டவேளி தன்னிற்
குறும்பாளர் காணுக் குடிலி—னுறும்பாச
மோட்டியேனே வைத்தனனே யுற்றபிர பஞ்சமேலாம்
ஆட்டியஞா னப்பிரகா சன். (சிவ 50)

என்றுஞ் சிவத்தோ டிணைபிரியா தேயறிவாய்
நின்றபடி தன்னை நிகழ்த்தினன்—மன்றின்
நடமாடு மாரூரன் ஞானப்ர காசன்
திடமாக வேன்னுள்ளத் தில். (சிவ 51)

நாதனுர் தேன்கமலை நாயகனு ரேன்னுயிர்க்கும்
போதனுர் சேங்கமலப் போற்பாதர்—பேதமற
வோன்றிரண்டு தானறவே யுண்மையிலே கூட்டியேனே
யின்றறவே வைத்துவிட்டா ரே. (சிவ 52)

நன்கருத்தே தேன்கமலை ஞானப்ர காசனே
யேன்கருத்தே யுன்கருத்தேன் றேண்ணும—லுன்கருத்தை
யேன்கருத்தேன் றேண்ணியே யான்பட்ட துன்பமேலா
உன்கருத்தே தீரவறி யும். (சிவ 97)

போல்லாத தீவினையிற் போகார்கள் போனுலு
மேல்லாஞ் சிவன்சேயலே யேன்றிருப்பர்—நல்லார்க
ணத்துங் கமலையில்வாழ் ஞானப்ர காசனருள்
‡சத்தும் பிரியா தவர். (சிவ 102)

அலையா மறிவை யலையாத வாறு
நிலையா வருளி னிறுத்தித்—தோலையாமற்
பூண்டவஞ்ஞா னத்தையேலாம் போக்கியேனே நன்ருக
ஆண்டவன்ஞா னப்பிரகா சன். 15

‡ சற்றும் என்பதன் மருஉ.

மாதா வுதரத்து வந்துதியா வண்ணமேனை
நாதாந்தத் தப்புறத்தே நாட்டினுன்—வேதாவும்
நாரணனும் நாடறிய நற்பதத்தன் றேன்கமலை
யாரணன்ஞா னப்பிரகா சன். 16

கமலையின்வாழ் ஞானப்ர காசனுக்கா ளானேம்
அமல னருளி லடைந்தோம்—நமலம்போ
யங்கெழுந்தோ மானந்த சாகரத்தி லாடினேம்
எங்கெழுந்தேன் ஞாயி றேமக்கு. 17

அருளேது யானே தறிவேது மாயை
மருளேது கன்மமல மேது—போருளேது
நற்பரனே தேன்கமலை ஞானப்ர காசனே
தற்பரனே தேசிகனே சாற்று. 18

ஏதமில்லா வாரூர்க் கிறைவ னேனதுளத்தில்
பேதமில்லா ஞானப் பிரகாசன்—பாதமலர்
பூணுத மெய்த்தலையும் போய்த்தலையே போன்மேனி
காணுத கண்ணுமரக் கண். 19

நங்கமலை வாழ்கின்ற ஞானப்ர காசனே
சேங்கமலப் போற்பாதா தேசிகா—வேங்கு
முனக்குள்ளே யானிருக்க வோடிவந்தே நாளு
மேனக்குள்ளே நீயிருந்தா யே. 20

பேருவேத ஞானப் பிரகாசா சேங்கைத்
தருவே யடியார் தவமே—குருவே
யுனையறிய மாட்டார்க ளுள்ளபடி யேங்குந்
தனையறிய மாட்டா தவர். 21

சிவத்தி லிருக்கச் சிவந்தேடி யெங்கு
மவத்திற் றிரிந்துழல்வா ரந்தோ—தவத்திலினி
தாரூரன் ஞானப் பிரகாச ஞனந்தப்
பேரூரில் வாழாத பேர். 22

நம்பனே தேன்கமலை ஞானப்ர காசனே
யும்பரயன் மாலறியா வுத்தமனே—நம்பினர்க்கு
மெய்யனே நாயேன் வினையை விழவுதைத்த
வையனே யென்னாண்ட வன். 23

நற்றவனே யாரூர்வாழ் நாலேழ் சகலகலை
கற்றவனே ஞானப்ர காசனே—யுற்றேன்னை
மன்னேன்ரு யிவ்வெள்ள மாகடலின் மன்னும
லேன்னேன்று கேட்டேனி யான். 24

கற்பார்கல் லாநிற்பார் கற்ருரிற் சேந்தமிழ்நூற்
போற்பாயுங் சேங்கமலப் போற்பாதன்—சோற்பாரி
னல்லார் புகழ்கமலை ஞானப்ர காசனேப்போ
லேல்லாம்வல் லார்தமைக்கா ணேம். 25

இங்குவரச் சற்றுமினி யெண்ணுதோ வாரூர்வாழ்
கங்கைபுனே ஞானப்ர காசனே—சங்கரனே
முன்னு வலர்க்கிரங்கி மூதிருளிற் சேன்றபத
மேன்னு வலுக்கிரங்கி யே. 26

## 5. முப்போருளளவை

சம்பந்த நாதனே சாற்றுமோரு விண்ணப்ப
மம்புவிமெய் கண்டா னருள் புதல்வன்—சம்பந்த
னப்பனரு ணந்திசித்தி யாரளவை யின்போருளே
முப்போருண்மேல் வைத்து மோழி. 27

மைந்தகேள் மெய்கண்டான் மைந்தன்மைந் தன்மைந்தன்
தந்தசிவ ஞானபோ தஞ்சித்தி—புந்தி
பரித்த பதிபசு பாசப் பனுவ
லருட்பயனூ லாதியுண்மை யாங்கு. 28

சிவதருமோத்தர நூலாசிரியராகிய மறைஞானபண்டாரஞ் செய்த பதி பசு பாசப் பனுவல் வேறு, இங்குக் காட்டிய பதி பசு பாசத் தோகை வேறு. தருமையாதீன வெளியீடு எண் 29 (1940)ஆக வெளி வந்தது.

பார்மே லளக்கப் படுவ தளவையா
மேர்கோள் முகத்த லெடுத்தலுட—ஞேர்பொருளே
யெண்ணுத னீட்ட லிவைநான்கா முப்பொருட்கு
நண்ணுமள வைசொல்வோம் நாம். 29

பிரமாதா ஞாதுருவாம் பேசுமுயிர் சத்தி
மருவருளும் ஞானம்ப்ர மாணம்—பிரமேய
மேகனே ஞேய மிவையொன்ரு மானந்த
போகம் பிரமிதியாம் போற்று. 30

பேசுபிர மாதா பிரமாண மூன்ருகு
மேசில்பிர மேய மிருவிதமா—மாசில்
பிரமிதியோன் றேஞானம் பேணுதாட் டாந்தங்
குருவருளா னீயறிந்து கோள். 31

பிரமாண மூன்றையுங்கேள் பேசவருங் காண்டல்
கருதலுரை யென்றறிஞர் காண்பர்—பிரமேயந்
தன்னியல் பென்றுந் தகும்பொதுவென் ருேரிரண்டா
முன்னிவிரிப் போமேநீ யோர். 32

குருவை மனிதனே கூறுசிவ னேவேன்
றிருமையாய்க் காண்டலைய மேன்பர்—குருவை
மனிதனேன்றுள் ளேதான் மதித்தல் திரிவாஞ்
சேனியாமே நீயுந் தேளி. 33

சவ்விகற்பக் காட்சி சடத்தையைந்தோ டேயறிந்து
போய்வகையாம் பாசத்தைப் போக்கலா—மவ்வுயிரா
ஞாதுருஞா னத்தாலே நாடிரே யங்காண்ட
லோது நிருவிகற்ப முன். 34

அபாவமோ ரைந்தா யதனுள் ளபாவ
சுபாவங்கண் காட்சியிலே துன்னும்—விபுமைந்தா
இல்லா வபாவ மேழிலனுமா னத்தடங்கு
நல்லோர்கள் சோல்வரிது நாடு. 35

போருளருத்தா பத்தி புகழோப் புவமை
தேருளோழிபே நற்பாரி சேடம்—வருமுண்மை
சம்பவ நல்லியல்பு சாருஞ் சுபாவலிங்க
நம்புமைந்து மேய்யனுமா னம். 36

ஐதிக மேன்றுமரு ளாகமத்தி லேயடங்கு
மேய்தவரு ணையா யிகன்பாட்டன்—மேய்திகழு
நீண்ட பவுரா ணிகர்வேறேன் பார்சைவ
ராண்டளவை மூன்றேன்பா ராய்ந்து. 37

உதகமேடுக் கப்போன ஞேட்டைக் குடத்தி
லதிலையேனி லுள்ள வபாவ—மிதுகாட்சி
யில்லிக் குடத்தானே யேன்ருனீ ராடுகேன்ற
லில்லபா வம்மானத் தேண். 38

இலைத்தேக ஞானிக்கேன் றுள்ள வபாவ
மலைப்பிலாக் காட்சியிலே மன்னு—மலைப்பிற்
சுபாவசித்தி யில்லையண்டத் தோற்றமென்ற லில்லா
வபாவமனு மான மறி. 39

கங்கா நதியிலே காணுமிடைச் சேரியேன்றுற்
கங்கையிலே யாயரில்லங் காட்டுவரோ—கங்கைக்
கரையிலிடைச் சேரியேன்றல் காணருத்தா பத்தி
விரவுமனு மானம் விளம்பு. 40

ஆன்மாவை யாக்கி யளித்தழிப்ப னீசனேன்று
லான்மாவுண் டாகி யழிவனே—ஆன்மாவின்
காயமுண் டாகிநின்றே காண வழியுமேன்றே
யாய்தலருத் தாபத்தி யாம். 41

ஒப்புவமா னந்தா னேருசார் மரையறியா
னிப்புவிமே லாவைப்போ லேன்றுகேட்—டப்படியோ
என்றுவனத் தோடி யேழின்மரையைக் காண்பதுவா
மோன்றனுமா னத்தடங்கு மோர். 42

சூரியனைப் போலச் சோருபசிவ னேன்றக்கா
லேர்கோளுப மானமா மீரிரண்டு—நேர்கோளலா
மீங்கிதுபோல் முப்போருட்கு மேதுவமை வந்திடினு
மாங்காங்கே நான்கேன் றறி. 43

பாரிசே டந்தான்சம் பந்தகுரு வாதிலே
காரமணர் †புத்தர் கருதிருவர்—ஊரறிய
வேன்றதில்லை யேன்றக்கால் மேய்ஞ்ஞான சம்பந்தர்
வேன்றதுதா னிச்சயமா மே. 44

† புத்தர் கழுமலரை என்றும் பாடம்,

பதிபசுபா சத்திற்ப்ர பஞ்சவநு போகம்
பதிபாசத் துக்கில்லேப் பார்த்தே—விதியேன்னி
லான்மாவுக் கேயா மதுபாரி சேடமா
மேன்பார்ப்பார்க் கில்லே யிது. 45

உண்மையே சம்பவமா மோர்நூறு போன்னிலே
யேண்பதுபோன் னுண்மையா மேப்போதுங்—திண்புவிமே
லோர்போருளேச் சோல்லிலதற் குள்ளதுதா னுண்மையே
சேர்அநுமா னத்தடங்குஞ் சேப்பு. 46

ஆயிரப் போற்கிழிக்கு ஊஞ்னூறு போன்வ்யாத்தி
நேயநிட்டை கூடு நிருமலர்க்குட்—டுய
போதுஞானக் காட்சி புகழும் வியாத்தி
இதுசம் பவமுண்மை யேண். 47

இயல்பு சுபாவலிங்க மேட்டுப்பேர் கூடித்
துயிலு மிடத்தயுத சோன்னம்—பயமுறவே
காணு விடிலேழுவர் கள்வரல ரேன்ருேருவ
ருணவரை தல்அனுமா னம். 48

துக்கசுக போகந்தான் சோல்சித்துக் கேன்னும்பே
ரக்கணமே நல்லோ ரமலமா—மிக்கபதிக்
கில்லேயேன் றேவரைங்தே யிங்கியம்பல் தானியல்பா
நல்ல சுபாவலிங்கம் நாடு. 49

ஐதிகங் கன்னபா ரம்பரிய மாகுமே
பைதிரமோ ராலிற் பசாசுண்டேன்—றுய்வோர்க்குக்
கேட்டபடி சோல்லல் கிளர்காட்சி மானமல்ல
நாட்டாக மத்தடங்கும் நாடு. 50

2762



மைந்தன்கா ணனேன்று மண்மே லருட்குருவாற்
பைந்தண் கயிலைப் பரம்பரைகேட்—டுந்தியே
வன்னுச் சிரமம் மறந்துபதே சங்கேட்டல்
கன்னபா ரம்பரியங் காண். 51

அபாவமுத லேழு மரும்பத மாதல்
சுபாவந் திருட்டாந்தஞ் சோல்லில்—விபுவாகு
முப்போருட்குஞ் சோன்னேமேல் முன்போற்சோன்
ஞல்விரியும்
முப்போருட்குஞ் சோல்வோ முயன்று. 52

அன்னியமாஞ் சாதியீ தாகுந்தன் சாதியி
தேன்னு விலக்கணந்தா னேகபதி—தன்னியல்பு
சச்சிதா னந்தந் தரும்போதுஞா னக்கிரியை
இச்சா சோரூபனேன்றே யேண். 53

அன்னியமாம் பாச மரனுந்தன் சாதியின்றித்
தன்னியல்பிங் கான்மாச் சதசத்தா—மன்னியம்போய்
நித்தியவி யாபகச்சித் தேன்றக்கா னேர்போதுவா
முத்தமனே நன்ரு யுணர். 54

நித்தசடம் பாசம் நிகழும் போதுவாகும்
வைத்தமலத் துக்கு மறைப்பிருளும்—போய்த்த
மயக்க வறிவாகு மாயைகன்மங் கட்கிங்
கியக்குவிகா ரந்தன் னியல்பு. 55

சம்பந்தங் கேளாய் தரும்பதிக்குஞ் சத்திக்குஞ்
சம்பந்த மேக சமவாயம்—நம்புயிர்க்கும்
*மாது பதிக்கும் அநந்நியதா தாத்மிகமா
மோதுவோ மேற்கே ளுவந்து. (*ஆதிபதியோ?) 56

அனாதி யுயிர்க்கு மனாதிமலத் திற்கு
மனாதிசை யோகமே யாகும்—வினைமாயை
யோத்தவுல குக்கு முயிர்க்குஞ்சம் பந்தஞ்சை
யுத்தசம வாய முணர்ந்து. 57

அரனுக்குச் சத்தி யதற்கான்மா வாவிக்
கிருளுக்குச் சுத்த மிதற்குப்—பெரிய
மயல்சுத்த மாயையந்த மாயைக்குக் கன்மம்
வியாபகவி யாப்பியமா மே. 58

கலப்பா னினைந்தாற் கருணையா னந்த
முலைப்பால் வெளிப்படுமே முத்தர்—நிலத்தந்தை
தாய்கலப்பா லுண்டாங் தடுமாற்றந் தீரவே
நீகலப்பா லேகமாய் நில். 59

அரன்குணமேல் லாமறித லாகுந் திருப்தி
விரவலுப்த சக்தி விசுத்த—நிராமயத்தோ
டன்றே சுதந்த்ர மனாதியா மெய்ப்போத
மென்று மனந்தசக்தி யெட்டு. 60

இச்சை யறிவியற்ற லின்பதுன்பந் தன்னுள்ளே
மெச்சு விருப்பு வெறுப்புடனே—நச்சா
மயக்க மியங்கா மலவுடலைத் தானென்
றியக்கு முயிர்ச்செயலிங் கேட்டு. 61

†விகற்பஞ்சங் கற்பம் வெகுளிமா மோக
மகற்றுங் கொலையு மஞருஞ்—சகத்தில்
மதமு நகையும் வருமா ணவமா
மிதமில் மலகுணமிங் கேட்டு. 62

---

† இருபாஇருபஃது 4.

†அஞ்ஞானம் போய்யோ டயர்வுபோரு ளின்மோகம்
போய்ஞாலத் தேபேய்த்தேர் போலிருத்த—லெஞ்ஞான்றும்
மாச்சரிய மும்பயமு மாயா மலத்துக்கு
வாச்சகுண மேழேனும்†நூல் வந்து. 63

†கிடத்த லிருத்தல் கிளைவினைகள் செய்தல்
விடுத்தல் பரநிந்தை மேவல்—அடுத்த
கருமத்துக் காறுகுணங் காண்மும் மலமும்
பரவுமுனக் கந்நியமாம் பார். 64

பதிபசுபா சங்களுக்குப் பார்தன் னியல்பும்
போதுவா மியல்பும் புகன்ருேம்—விதமிவைகட்
கவ்வியாத்தி யோடதிவ் யாத்தி யசம்பவம்விட்
டேவ்வமில் லாதே யியம்பு. 65

பிரமாணத்தோகை இத்துணையும்

முக்காட்சி

இந்திரியக் காட்சி யிலங்குபூ தப்பழிப்போ
டைந்து போறியு மறவுணர்தல்—அந்தக்
கரணசுத்தி மானதமாங் காட்சி கலாதி
தரலோழிவு தன்வே தனே. 66

முக்காட்சியுள் இதன் பின் 16 வேண்பாக்கள் சிதைந்துள்ளன. விஷயம் முத்திநிலை முப்பதவதாரத்துட் காண்க.

---

† இருபா இருபஃது 4

காட்டுமுகப் பொல்லாப்புக் கண்ணுடி தன்னைநோக்தோ
யோட்டையென வேயுடைத்தா லொப்புவரோ—நாட்டகத்தா
னீசெய் வினைக்கீடாய் நின்மலனுல் மேய்தோன்று
மீசனைநோ காதே யிரு. * * 67

தற்பரமன் ஞாயிருளி சத்திகண்க ளேபசுக்கள்
தற்பணமா மாயையுருத் தத்துவங்கள்—நற்பகுதி
யெண்ணுமை யாணவமா மின்பவிகா ரங்கன்மங்
கண்ணுடி யுள்ளோளியைக் காண். 68

கடனீர் சிவமதற்குட் கன்மமுதற் ருேற்றஞ்
சடமாயை யாம்போய்ச் சகச—நெடும்பவந்தா
னீரைக்காட் டாமைவினை நீயதுவாய் நிற்றலாம்
பார்வையுயிர் போய்யுமெய்யும் பார். 69

குருடரங்கை சித்ரக் குறியை யுருதே
தருசுவ ரோன்றைத் தடவும்—பெரியோர்
சிவமோன்றே காண்பர் சேகத்தோற்றங் காணர்
பவமறநீ யுஞ்சிவனைப் பார் 70

உடல்குனிந்து முக்கிக்கை யூன்றிமுழங் தாளிற்
றடநெடுங் கோபுரத்தைத் தாங்குஞ்—சடமாகும்
பாவைக்கா தாரம்பார் பஞ்சக்ர்த்யங் தானேன்னு
மாவிக்கா தார.மருள் 71

பேரோளியாஞ் சூரியனும் பேருலகிற் சேர்போருளுங்
கார்நிறக்கூ கைக்கிருளாக் காணுமே—பூரணமா
மேக னருளோளியு மின்பவா னந்தமுமேய்ப்
பாகமுமில் லார்க்கிருளாம் பார். 72

பூனை விழிக்கிலப் பூதவிருள் பேரொளியா
மானதே காதிப்ர வஞ்சமெல்லா—ஞானிகண்ணுக்
கேகனரு ளானந்த வின்பவொளி யாய்நிற்கும்
பாகமுட னீயறிந்து பார். 73

எங்குஞ் சிவாதனமா மெங்குஞ் சிவமூர்த்தி
யெங்குஞ் சிவமூல மென்றறிந்தே—எங்கு
மறைப்பிருளு நீக்க வளரஞ் செழுத்தாற்
றுறப்பரிய மெய்விளக்கைத் தூண்டு. 74

எங்குஞ் சிதம்பரமே யெங்குங் கனகசபை
யெங்குஞ் சிவன்கூத் தெழுத்தைஞ்சே—யெங்குஞ்
சிவகாமித் தாயெங்குஞ் சேவிப்போ ரெங்கு
மவமகல மைந்த வறி. 75

அளவைக்குத் தாம் பிரமாணமாகக்கொண்ட நூல் இவை என்கின்றார்.

வந்தவனு மானவுப மான வளவைக்கிங்
கேந்தநூல் முன்னூ லியம்புவாய்—மைந்தா
சிவநெறிப்ர காசஞ் சிவப்பிர காசந்
தவர்புகழ்ஞா னமிருதந் தாம். 76

தத்துவப்ர காசஞ் ‡சதுர்வேத சங்கிரக
முத்தர்பாற் கேள்வி முறைத்திரட்டுச்—சித்திமுதற்
பன்னூலி லுண்மை பகர்ந்தான் குருவவைக
ளிந்நூலிற் சொன்னே மெடுத்து. 77

‡ சததரேற்றின்—(?) என்பதும் பாடம்.

உவமானம் இத்துணையும்

## முப்பொருளளவை

## அநுமானத்திற் பிரமாணத்திரயம்

காட்சியனு மானங் கருத லனுமான
மாட்சி யுரையி லனுமான—மாட்சியா
மூன்றுமுரைத் தையனே முப்பாசப் பொய்க்கடலிற்
ரேன்றுமெனைக் கைதந்து தூக்கு. 78

சச்சிதா னந்தமயந் தானகி நின்றகுரு
இச்சகந்தோன் றும லிருத்தலான்—மெய்ச்சீட
னுட்சியா னந்த வனுபோகி யென்றறிதல்
காட்சியனு மானமெனக் காண். 79

நிற்குமா தார நிராதார மீதான
முற்சொலனு போக மொழிதடுமா—றச்சீடன்
புல்லுஞ் சிவானந்த போகியல வென்றறித
னல்லனுமா னத்தனுமா னம். 80

சரியைகிரி யாயோகந் தாம்முற்றி நாலாய்
வருசத் திநிபாதம் வந்து—திருவருளை
யொல்லையினிற் காணவந்தா னேங்குபரி பாகியென்ற
னல்லா கமத்தனுமா னம். 81

## உரையளவை—தந்திரகலை

சிவாகமங்கண் மூவிதமாய்ச் செப்பினதே தென்னு
ளவாவொழியச் சொல்லியெனை யாள்வா—யுவாவுரிபோர்த்
தானந்த நாடகஞ்செய் யத்தனே மெய்ஞ்ஞானத்
தானந் தருஞ்சம்பந் தா. 82

திரிபதார்த் தத்திற் சிவனேவிட் டான்மா
வறிவுமல சத்தி யனந்தம்—பிறிதலிஞற்
பாலரைப்போன் மேன்மேற் பகுத்தறிவு தோன்றுமது
நாலுவித மேன்றுநீ நாடு. 83

நாலுவித மாவனகே ணற்சரியை நற்கிரியை
சீலமார் யோகஞ் சிவஞானம்—நாலுவிதத்
தாலே சிவனடியி லன்புசெய்தோர் தாம்பேறுவர்
சாலோக மாதிபதந் தாம். 84

சரியை கிரியை தருமிரண்டுந் தந்த்ரம்
வருயோக மோன்றுந்தான் மந்த்ரந்—தருமேக
ஞானமுப தேசகலே நாற்பாத முக்கலேயுட்
டானடங்கு மேன்னுமறை தான். 85

சரியை கிரியையேனுந் தந்த்ரகலே சோன்ன
விரதந் தவருமல் மேய்யர்—அரனடியின்
மேல்விஜனகள் வல்விஜனகள் மேதினிமேற் சேய்தபடி
சேல்வமுற நீயுமோன்று சேய். 86

மந்திரகலே

மந்த்ர கலேதான் வளர்யோக பாதமாந்
தந்த்ரகலே சோன்னபடி தான்சேய்து—மந்த்ரகலே
சேய்து வரும்வகையைச் சேப்பக்கேண் மாணவக
ஐவகையா மாசை யறுத்து. 87

நேரா மியமம் நியமமுட ஞசனங்க
ளார்தா ரணேபிரத்தி யாகார—மேர்மனுவாஞ்
சேர்பிராண யாமந் தியானஞ் சமாதியிவை
யார்யோகத் தட்டாங்க மாம். 88

ஆதார மாறிலரு ஊங்கரத்தோ ஞன்முகத்தோ
ஞேதுந் திருமா லுருத்திரனேந்—தாதையா
மீசன் சதாசிவன்ரு னிங்கிவர்கள் சத்தியுடன்
வாசமலர் மேலிருப்பர் வந்து. 89

மூல வளியை முடுக்கியிடை பிங்கலேயைச்
சால வடைத்துநடுத் தான்திறந்தால்—மேலாஞ்
சுழுமுனேயாஞ் சித்திரமாஞ் சோல்வச் சிரமாம்
முழுதுமோன்ருய்க் காணுமே முன். 90

ஆடரவக் கிண்கிணிக்கா லேயனச பாநடந்தா
னீடிருபத் தோரா யிரத்தறுநூ—ருடலோலி
மேய்யிலேழுந் துள்ளடங்கு மேதினியோர் நாளோன்றுக்
குய்யுமறி வோரறிவா ருற்று. 91

பரவிந்து வேசிலம்பாய்ப் பண்பான நாதந்
திரவோலியாய்ப் பாதத்திற் சேர்ந்தே—யரனடியார்
போற்புண்ட ரீக புரசபையி லானந்த
வற்புதன தாடரேழி லேந்து. 92

திருச்சிலம் போசை யோலிவழியே சேன்று
நிருத்தனேநீ கும்பிடேன்ருர் நேயத்—திருத்துந்
திருக்களிற் றுப்படியார் சேமத்திற் சோன்ஞர்
குருக்கடைக்கண் ணுலறிந்து கோள். 93

மந்திரகலே

அத்தன் சிலம்போலிகேட் டாங்கே யனந்தரவி
சுத்தவோளி கண்டுவிந்து தூயமதி—வைத்த
யமுதையுட லிற்றேக்கி யார்வத்தோ டுண்டு
விமலராய் வாழ்வார் வியந்து. 94

மாத்திரை தானம் வடிவங் குலங்கண்மேற்
பார்த்தறியுஞ் சூனியங்கள் பாராதி—மூர்த்திகண்மேய்
மிஞ்சும்ப்ர காச மிகுமட்டாங் கத்தோடே
யஞ்சீரா றீரேட் டறிந்து. 95

தத்துவங்கண் மேதையிலே தங்குமிரு பத்துநா
லத்தனருக் கீசத்தி லாருகுஞ்—சுத்தவிடத்
தோன்ருகும் விந்துவிலே யோரிரண்டா நாதந்தா
னேன்றுமேட்டா மூன்றவையி லே. 96

பிண்டமீ தாகுமுன்னே பேசும்பூத் தோன்றினிலே
மண்டியிடு மந்த்ரபத வன்னமேலாங்—கோண்ட
பிரமாண்ட மாதி பேரும்புவனந் தத்வம்
விரவுங் கலையைந்து மேல். 97

மந்த்ரகலை சோன்னீர் மருவுமுப தேசகலை
யேந்தையயே சோல்லி யேனையாள்வீர்—மைந்தா
சரியைகிரி யாயோகந் தாம்முற்றி வந்தோர்க்
கருளுபதே சந்தேரியு மாங்கு. 98

மந்திரகலை முற்றும்

உபதேச விளக்கம்

குருவே யுபதேசங் கூறேன் குருவின்
குருவின் குருவின் குருவின்—குருவின்
குருவின் குருவின் குருவின் குருவின்
குருவுபதே சஞ்சோல்வேன் கோள். 99

கோற்றங் குடிவாழ் குருவா முமாபதிசொல்
நற்றிரு வருட்பயனை நாடியே—யற்பாய்
வினுவுமவன் சொல்லும் வினுவெண்பா நூரு
மனேலயமாக் கேட்டருளில் வாழ். 100

## உபதேசகலை

புறநூ லனைத்தையும் பூருவமாத் தள்ளி
யறவாணர் சித்தாந்த மாய்ந்து—துறவாவா
ருண்மைநிலை தன்னை யுயர்ஞானத் தேயறிதல்
திண்மையுப தேசந் தெளி. 101

ஞானகாண் டம்பற்றி நம்ப னிறைவனெனத்
தானவனே யெண்குணத்துத் தாணுவென—மோனமுற
முந்தும் பசுபாச முற்று முடையனெனச்
சிந்தித்துத் தேர்க சிவம். 102

## பக்கப் போலி முதலியன

உருவிலுயிர் காணு ருருவ முபய
மருவஞ் சொரூப மறியார்—சரியைமுத
லுலுபா தந்தெரியா நாட்டிற் பசுக்களே
நாலுபக்கப் போலியென நாட்டு. 103

மூவேதுப் போலியா மூவேழை யுங்களாய்
தாவுபெய்த் தெரிந்த்ர சாலமாய்—மேவு
முலகென்று நித்தியமென் ரேதி மயங்கு
முலகாய தன்முதலோ ரோர். 104

உவமானப் போலி யோருபதினேட் டுங்கேள்
சிவனிதுபோ லேன்றேன்று சேப்பிற்—சிவமுதல்தா
ஞேப்புயிர் மாயைகடங் தோங்கிநிற்போ னேன்னும
லப்படியே யேன்றறித லாம். 105

இரண்டிரு பத்திரண் டேன்தோல்வித் தான
மரன்பரம தத்துவமேன் னுமற்—பரசமய
வேறுதேய்வஞ் சோல்குருவு மேய்யேன்று கேட்டதனைத்
தேறுகின்ற சீடனுமாஞ் சேப்பு. 106

அளவைப்போலி இத்துணையும்

மேய்யுணர்தலிற் பேறும் போருள் ஆகமப் பிரமாணத்திற் போல ஏனைப் பிரமாணங்களுக்குத் தேற்றேன விளங்கா மையை வகுத்துக் கூறுகின்ருர்.

....................................
.................................. ...
.......................கவலையுட—ஞேடுவார்
மானேயீ தேன்னபுது மை. 107

சாத்திரஞ்சோல் பானு தருகிரணங் கோல்கோடுப்போர்
பார்த்தறியுங் கண்கள் படலமிருள்—சோத்தமாங்
கோற்ருேழில்பின் கண்படலங் கூரிருளை மாற்றியோளி
போற்றவைப்போ ரேன்றுமுண்டு போற்று. 108

நேஞ்சுடையாய் நீகாந்த நின்னிடத்திற் பாசமிரும்
பஞ்சலேனு மீச னணைப்பவனும்—பஞ்சமல
நாசமுற நான்போயே ஞயகனுங் காந்தமுன்னே
நேசமுறு முசிபேண்போ னில். 109

கண்ணுடையார் புன்கோலுங் கண்ணில்லார் போன்கோலு
மேண்ணு மிழிவுசிறப் பேன்னவே—கண்ணுதலின்
சேணு ரருள்கண்டார் தேகமழ கின்மையுங்கண்
காணு ருடலழகுங் காண். 110

அண்டம் விழுங்குங்கா லாக்கினிபோ லேகசிவந்
திண்டிறலா காசம்போற் சீவவேளி—கண்டிருந்தால்
வல்லிருளு மாயை மயக்கும்விவ காரமேனும்
பல்வினையுந் தோன்ருது பார். 111

பாற்கடல்போ லேகசிவம் பன்மீன்போ லேபசுக்கள்
சேர்க்குமறி வின்றிச் சிறுமீனைப்—பார்த்துழன்று
வாடுதல்போற் பேத்தம்பால் வாய்திறந்தே யுண்டுவிளை
யாடுதல்போற் சீவன்முத்தி யாம். 112

அண்டத்தில் வாயுவா தாரமா யேண்ணிலணுத்
தண்டரையா தாரமின்றித் தானிற்கு—மண்ட
மனந்தத்துக் கீசனரு ளாதார மாகு
நினைந்தாதா ரத்துள்நீ நில். 113

அகச்சா ளரத்தி லணுத்தோன்று மல்லாற்
சுகப்பானு முன்கண்ணிற் ரேன்ருச்—சகக்காட்சி
காயத்திற் ரேன்றுமல்லாற் கண்ணுதலா னந்தவோளி
நேயத்தி லில்லை நினை. 114

ஒயாமல் முப்போருட்கு முள்ளசுபா வங்கண்டால்
வாயில்லை யென்றறிந்து மாணவக—பேய்போல
முன்னிலையை நாடியே மோசம்போ ஞய்ஐயோ
என்சேய்வேன் சங்கரா இங்கு. 115

